Phone: No. 2241

Regd. No. M. 5934

# ஜனசக்தி

தின இதழ். ஆசிரியர்.ப.ஜீவானந்தம்

மலர் 14] பக்கம் 4 :: விலை 1 அணு [இதழ் 140

சென்னை 5-1-58, ஹேவிளம்பி, மார்கழி-21 ஞாயிறு (வெளியூர் 6-1-58 ஹேவிளம்பி, மார்கழி-22 திங்கள்)

### செயற்கை சந்திரனை சிருஷ்டித்த ரஷ்ய விஞ்ஞானி

**சென்னை வந்துள்ளார்**

சென்னை, ஜன. 4—

செயற்கைச் சந்திரனை சிருஷ்டித்து உலகை அதிசயத்திலாழ்த்திய அற்புத சோவியத் விஞ்ஞானி பேராசிரியர் பார்தின் இங்கு நடைபெறும் இந்திய விஞ்ஞான மாநாட்டுக்கு சகோதரப் பிரதிநிதியாக விஜயம் செய்திருக்கிறார்.

### 1500 மின்சாரத் தொழிலாளர் உள்ளிருப்பு வேலைநிறுத்தம்

சென்னை, ஜன. 5—

நேற்று காலை 7 மணி முதல் 12–30 வரையில் சென்னை பவர் ஹவுஸ் பேசின் பிரிட்ஜ் மின்சார நிலையத்தில் வேலை செய்யும் 1500 தொழிலாளர்கள் தமது கோரிக்கைகளைப் பற்றி முடிவெடுக்க நிர்வாகம் காலதாமதம் செய்வதை ஆட்சேபித்து உள்ளிருப்பு வேலை நிறுத்தம் நடத்தினர்.

# கேரளத்தில் மலையாளம் ஆட்சிமொழி

## 1965-க்குள் ஹிந்தி ஆட்சி மொழியாவது சாத்தியமல்ல

### கேரள முதலமைச்சர் கருத்து

புதுடெல்லி, ஜன. 4—



மொழிப் பிரச்சினை பற்றி கேரள சர்க்காரின் பொதுக் கொள்கையை கேரள முதலமைச்சர் இ. எம்.எஸ். நம்பூதிரிப்பாட் இங்கு விளக்கினார். ராஜ்ய மட்டத்தில் ஆங்கிலத்திற்குப் பதில் மலையாளமும், மத்திய சர்க்கார் மட்டத்தில் ஆங்கிலத்திற்குப் பதில் ஹிந்தியும் ஆட்சிமொழியாக இயங்க துரிதமான மாற்றங்கள் செய்யப்பட வேண்டும் என்றார்.

காலவரையறை பற்றிக் குறிப்பிடுகையில் 1965க்குள் ஹிந்தியை ஆட்சிமொழியாக்குவது சாத்தியமல்ல என்றார்.

ஆங்கிலத்தின் வருங்காலம் பற்றிக் குறிப்பிட்ட அவர் இன்று ஆங்கிலத்திற்குள்ள அந்தஸ்தை நிராகரிப்பதாயும் உயர் கல்விக்கோ தொழில் நுட்ப ஆராய்ச்சிக்கோ ஆங்கிலம் வேண்டும் என்பவர்களுக்கு வசதி செய்து தரப்படும் என்றார்.

கம்யூனிஸ்ட் சர்க்காரை எதிர்க்கும் கட்சிகள் நிர்வாகத்திற்குப் பல்வேறு முட்டுக்கட்டைகளைப் போட்டு வருவதாயும், மந்திரிகளை ஒழித்து விடுவதாகக்கூட அச்சுறுத்தல்கள் செய்வதாயும் குறிப்பிட்டார்.

கம்யூனிஸ்ட் எம். எல். ஏக்கள் சிலரைப் பெருந்தொகை கொடுத்து கட்சியிலிருந்து விலகும்படி செய்ய நடத்தப்பட்ட முயற்சிகளைப்பற்றிக் குறிப்பிட்ட அவர், இந்த முயற்சிகள் தோல்வியடைந்துவிட்டன என்றார்.

இதுபற்றி சாட்சியங்கள் உண்டா என்ற கேள்விக்குப் பதிலளித்த இம். எம். எஸ். நீதிமன்றத்தில் நிரூபிக்கத் தக்க சாட்சியம் இல்லை. ஆனல் பொதுஜன அபிப்பிராயம் என்ற நீதிமன்றத்தில் நிரூபிக்க தக்க சாட்சியம் உண்டு. இந்த சாட்சியம்தான் காங்கிரஸ்காரர்களைப் பேசா மடந்தைகளாக்கிவிட்டது என்றார்.

#### உப தேர்தல்

உப தேர்தல்களினல் கம்யூனிஸ்ட் கட்சிக்குப் பலவீனமேற்படுமா என்ற கேள்வி எழுந்தது. சிலர் அவ்வாறு நினைக்கிறார்கள் ஆனல் அப்படி ஏற்படாது.

**ஸ்ரீமந் நாராயண் புளுகு**

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் பத்திரிகையான எகனமிக்

(2-ம் பக்கம் பார்க்க)

### கேரளத்தில் காகித தொழிற்சாலை

**பிர்லாவுடன் மந்திரி யோசனை**

புதுடெல்லி, ஜன். 4—

கேரள ராஜ்யத்தில் நீலம்பூரில் ஒரு காகிதத் தொழிற்சாலை ஸ்தாபித்து நடத்துவது சம்பந்தமாகத் தொழிலதிபர் பிர்லாவிடம் கேரள முதலமைச்சரும் நிதியமைச்சரும் பேச்சுவார்த்தைகள் நடத்தியதாகத் தெரிகிறது.

இந்தப் பிரதேசத்தில் காகிதம் செய்வதற்கு அவசியமான கச்சாப் பொருள்கள் அபரிமிதமாக கிடைப்பதாகவும் நிலம் உட்பட தொழிற்சாலைக்கு வேண்டிய வசதிகளை சர்க்கார் செய்துதருமென்றும் கூறப்பட்டது. திரு பிர்லா தனது பிரதிநிதியை அனுப்பி தொழில் வாய்ப்புகளை பரிசீலனை செய்வதாகக் கூறினர்.

இந்த ஆண்டு முடிவுக்குள் தொழிற்சாலை ஸ்தாபிக்கப்படலாம் என்று நம்பப்படுகிறது.

**முந்திரா கம்பெனியில்**

## ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்ப்பொரேஷன் முதலீடு

### விசாரணை செய்வதற்கு நீதிபதி சாக்லா நியமனம்

புதுடில்லி, ஜன. 4—

முந்திரா கம்பெனியில் ஆயுள் இன்ஷியூரன்ஸ் கார்ப்பொரேஷன் நிதியிலிருந்து எத்தனை பங்குகள் வாங்கி முதலீடு செய்துள்ளனர் என்பது பற்றிய விபரங்களை அறிவதற்காக பம்பாய் உயர்நீதி மன்ற பிரதம நீதிபதி எம் சி. சாக்லா இந்திய சர்க்காரால் நியமனம் செய்யப்பட்டிருக்கிறார்.

இந்த விவகாரம் குறித்து மக்கள் சபையில் காரசாரமான விவாதம் நடைபெற்றது. கார்ப்பொரேஷனின் முதலீடு குழுவைக் கலந்து கொள்ளாமல் பெருந்தொகை இந்தக் கம்பெனியில் முதலீடு செய்யப்பட்டதாகப் புகார் எழுந்தது.

இதுபற்றி விசாரணை செய்வதாக நிதிமந்திரி டி. டி. கிருஷ்ணமாச்சாரி வாக்குறுதியளித்தார்.

இந்த விவகாரம்பற்றிய விசாரணை இரண்டு வாரங்களில் முடிக்கப்பட்டு அறிக்கை வெளியிடப்படும்.

முந்திரா கம்பெனி விவகாரம் பற்றி வேறுபல விசாரணைகளும் நடைபெற்று வருகின்றன. விபரங்கள் தெரிந்தபிறகு இந்த நிலைக்கு யார் பொறுப்பாளிகள் என்பதை உணர்ந்து நடவடிக்கை எடுக்க சர்க்காரை வற்புறுத்துவார்கள் என்று தெரிகிறது.

# ஹைட்ரஜன் குண்டு சோதனைகளைத் தடை செய்க

## 80 லட்சம் தொழிலாளர் சார்பில் பிரிட்டிஷ் தொழிற்சங்க தூதுகோஷ்டி

### பிரதமரிடம் வலியுறுத்தும்

லண்டன், ஜன, 4—

இங்கிலாந்திலுள்ள எண்பது லட்சம் தொழிலாளர்களைக் கொண்ட பிரிட்டிஷ் தொழிற்சங்க காங்கிரஸ் ஹைட்ரஜன் குண்டு சோதனைகளை தடை செய்ய வேண்டும் என்று கோரி பிரிட்டிஷ் பிரதமர் மாக்மிலனிடம் வலியுறுத்த முடிவு செய்துள்ளது.

இந்த ஸ்தாபனத்தின் சார்பில் இந்த முடிவை எடுத்துக்கூற நாளை (திங்கள் ஜன. 6) ஒரு தூதுகோஷ்டி பிரதமரை சந்திக்கும் ஹைட்ரஜன் குண்டு சோதனைகளை உடனடியாக நிறுத்தி அதைத் தொடர்ந்து ஹைட்ரஜன் குண்டுகள் உற்பத்தி செய்வதை இறுதியாக நிறுத்த இந்த தூதுகோஷ்டி கேட்டுக் கொள்ளும்.

பிரிட்டன் மீது அமெரிக்க பெட்ரோல் விமானங்கள் ஹைட்ரஜன் குண்டுகளை ஏற்றிச் செல்வது பற்றியும் தூதுகோஷ்டி ஆட்சேபணை எழுப்பும்.

அணு ஆயுத யுத்த பேரபாயம் பற்றி இங்கிலாந்திலுள்ள பல்வேறு தொழிற்சங்கங்களும் கவலை தெரிவித்துள்ளன.

அதோடு பிரிட்டனில் அமெரிக்கா ராக்கெட் தளங்கள்அமைப்பதுபற்றி எடுத்த முடிவும் பிரிட்டிஷ் மக்களிடை கவலை ஏற்படுத்தியுள்ளது.

கடந்த செப்டம்பர் மாதத்தில் நடைபெற்ற பிரிட்டிஷ் தொழிற்சங்க காங்கிரஸ் மாநாட்டில்அணு ஆயுதங்களைசோதனை செய்வதால் ஏற்படும் அபாயம் பற்றி ஏகமனதான தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருந்தது.

## ஆங்கிலமே நீடிக்க வேண்டும் என்பது நாட்டுக்கே கேவலம்

### டெல்லி சர்வகலாசாலை துணை வேந்தர் கருத்து

ஆமதாபாத், ஜன. 4—

நீண்ட நெடுங்காலம் (என்றும்) ஆங்கிலமே ஆட்சி மொழியாக நீடிக்க வேண்டும் என்று கோருவது 5000 ஆண்டுகளுக்கு மேல் தொன்மையான நாகரீகம் படைத்த நமது நாட்டினைக் கேவலப்படுத்துவதாகும் என்று டெல்லி சர்வகலாசாலை துணை வேந்தர் டாக்டர் வி. கே. ஆர். வி. ராவ் கூறினர்.

சென்னையில்நடந்த மொழி கன்வென்ஷன் அத்தகைய முடிவு எடுத்தது துரதிருஷ்டமானது என்றார்.

மறைந்து வரும் சந்ததியினரின் கருத்துக்களைக் கடந்து வருங் காலத்தைப்பற்றிப் பார்க்கவேண்டும். சுதந்திர இந்தியாவின் அறை கூவலைக் கணக்கிலெடுக்க வேண்டும் என்றார்.

## ஆசிய-ஆப்ரிக்க ஒற்றுமைக் கவுன்சில் அமைப்பு

### மார்ச் 25-ல் அல்ஜீரிய விடுதலை தினம்

கெய்ரோ, ஜன. 3—

ஆசிய-ஆப்பிரிக்க ஒற்றுமை அமைப்பின் நிரந்தரக் கவுன்சில், இன்று கெய்ரோவில் கூடியது. எகிப்து இந்தக் கவுன்சிலின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டது. இந்தியா, சூடான். சோவியத் யூனியன், அல்ஜீரியா ஆகிய தேசங்கள் உதவித் தலைவர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டன. இந்த நிரந்தர ஸ்தாபனத்திற்கு நிதி உதவி ஒவ்வொரு உறுப்பினரும் தரவேண்டும் என்றும் முடிவு கட்டப்பட்டது. ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலுமுள்ள ஒவ்வொரு தேசத்திலும் இதன் கிளைகள் அமைப்பதென முடிவெடுக்கப்பட்டன.

மார்ச் 30-ந் தேதியை அல்ஜீரிய தினம் என்றும், மார்ச் 1-ந் தேதியை அணுகுண்டு தடை தினமாகவும் கொண்டாட வேண்டும் என்றும் முடிவுகட்டப்பட்டது.

### இந்திய மாணவருக்கு சோவியத் உபகாரச் சம்பளம்

சென்னை, ஜன. 4—

அடிப்படை விஞ்ஞானம், தொழில் நுட்பம், விவசாயம், வைத்தியம் ஆகிய துறைகளில் ஆராய்ச்சிகள் நடத்திப் பயிற்சி பெற சோவியத் சர்க்கார் இந்திய மாணவர்களுக்கு 11 உபகாரச் சம்பளங்களை அளிக்க முன்வந்துள்ளது. படிப்பு 3 முதல் 4 வருடங்கள் இருக்கும்.

இலவச ஹாஸ்டல் வசதியுடன் மாதம் 800 ரூபிள் அளிக்கப்படும். இதைத் தவிர புத்தகங்கள் வாங்க வருடத்திற்கு 950 ரூபிள், விடுமுறைக்காலச் செலவுகளுக்கு 1785 ரூபிள், உடைகளுக்கு 2500 ரூபிள் அளிக்கப்படும்.



ருமேனியக் கலைஞர்கள் கிராமிய நடன ஆட்டங்கள் சென்னையில் 3-ந் தேதி நடந்தபோது எடுத்தபடம்

# மக்கள் மன்றம்

## இந்தி எதிர்ப்பா—ஆங்கில மோகமா ?

சென்னை சாஸ்திரி ஹாலில் சமீபத்தில் நடந்த இந்தி எதிர்ப்பு வாதிகளின் கூட்டத்தில், திரு. ஆர்.வி.கிருஷ்ணய்யர் இந்தி, யூனியன் ஆட்சி மொழியாகக்கூடாதெனவும், தொடர்ந்து ஆங்கிலமே இருக்க வேண்டுமெனவும், பேசி வரும்போதே, தமிழ்நாட்டிலும் ஆங்கிலத்திற்குப் பதில், தமிழ் ஆட்சிமொழியாகக்கூடாது, ஏனெனில், தமிழில் சட்ட வார்த்தைகளுக்குச் சமமான தமிழ்ப் பதங்கள் கண்டுபிடிப்பது கஷ்டமாக இருந்ததென்றும், அரசியலமைப்பின் தமிழ் பதிப்பில் அநேக வார்த்தைகளைத் தன்னால் புரிந்து கொள்ள இயலவில்லையெனவும் கூறினார். (தினமணி 31–12–57) ஆங்கிலயே தொடர்ந்து நீடிக்க வேண்டும், இந்தி யூனியன் ஆட்சி மொழியாகக்கூடாது என்பவர்களின் ஆங்கில மோகம் எந்த அளவுக்கு உறைந்து போயிருக்கிறது என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டு. இந்த மனோபாவம் இந்தி எதிர்ப்பு வாதிகள் பலரது உள்ளங்களில் படிந்துதானிருக்கிறது. ஆனால் திரு. கிருஷ்ணய்யர் வார்த்தைகளைக் கொட்டிவிட்டார்.

இந்தி யூனியன் மொழியாவதை எதிர்க்கின்ற இவர்கள் தமிழ் மொழியின் பலத்திலின்று, அதன் பற்றுணர்வின் பக்கம்நின்று தமிழ் பொதுமக்களின் பக்கம் நின்று நியாயம் கோரவில்லை. மாருக, ஆங்கிலம் கற்ற பட்டதாரிகளின் பக்கம்நின்றுகொண்டுதான் எதிர்க்கிறார்கள். இந்த எதிர்ப்பில், ஆங்கிலம் கற்றுணராத கோடிக்கணக்கான தமிழ் மக்களுக்கு அக்கறை இருக்க நியாயம் இல்லை. காரணம், அவர்களுக்கு, ஆங்கிலமும்புரியாத மொழிதான், அது மட்டுமல்ல, ஆங்கிலம்தான், நிர்வாகத்தில், சட்ட மன்றத்தில், கல்லூரிகளில் தடைக் கற்களாக நின்று தாய் மொழியாம் தமிழை, அதன் வளர்ச்சியை தடுத்தது. இந்த பிரம்மாண்டமான உண்மையை, இந்த இந்தி எதிர்ப்பு வாதிகளோ, பிரிவினைவாதிகளோ மறந்தும் சொல்கிறதில்லை. எனவே, இந்த எதிர்ப்பு வாதிகளின், ஆங்கில மோகத்தின் நச்சு அலைகள், தமிழ் ஆட்சி மொழியாவதையும், போதனா மொழியாவதையும், சட்ட மன்ற மொழியாவதையும் தடைப்படுத்த ஒத்திப் போட தமிழ் பெருங்குடி மக்கள் அனுமதிக்கக்கூடாது.

—எழிலன்
நெல்லை.

●

## பூச்சித் தொல்லை

செங்கற்பட்டு ஜில்லாவில் பரவலாக சம்பா பயிர்களையும், சூல் பயிர்களையும், நடவுகளையும் பூச்சிகள் அழித்துப் படுநாசப்படுத்தி வருகிறது. விவசாயிகள் இதைப் போக்க என்ன செய்வது என்றே புரியாமல் தவிக்கின்றனர். விவசாயிகள்இலாக்கா மூலம் உடனடி நிவாரணம் கிடைப்பது அரிதாக உள்ளது. விவசாய இலாக்காவுக்குச் சொன்னால் தன் கஷ்டம் தீரும் என்ற நம்பிக்கை விவசாயிகளுக்கு இல்லை. ஏற்கனவே கடன் பளுவால் கஷ்டப்படும் விவசாயிகள் மேலும் கடன் பட்டும், தம் கையில் இருந்த கொஞ்சநஞ்ச காசுகளையும் செலவு செய்து சாகுபடி செய்துவிட்டு மருந்து வாங்கி தெளித்து பூச்சிகளைப் போக்க முடியாமல் ஏங்கி நிற்கின்றார்கள். சிலர் வேறு வழியின்றி அறியாமையில் இறங்கி ஆண்டவனிடத்தில் முறையிட்டு பூச்சிகளைப் போக்கிவிடலாம் என்ற நம்பிக்கையால் பொங்கல் வைத்து பூசை போட ஆரம்பிக்கின்றார்கள். எனவே பயிர்களை பூச்சிகள் அழியாது காப்பாற்ற விவசாயிகளுக்கு இனாமாகவும், நீண்டநாள் கடன் தவணையிலும் உடனுக்குடன் மருந்துகள் வழங்க வேண்டும். இல்லையேல் உணவு உற்பத்திற்கே பெருத்த ஆபத்து உண்டாகிவிடும். ஆகவே சர்க்கார் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு விசேஷ உத்தரவுகள் அனுப்பி ஆவன செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

சி. கே. மாணிக்கம்
பொன்னேரி.

●

## லேவாதேவி தொல்லை

நாமக்கல் தாலூகாவில் சுமார் 3 லட்சம் ஏக்கர் நிலங்களில் விவசாயம் செய்யப்படுகிறது. இதில் 2 லட்சம் ஏக்கர் நிலங்கள் வானம் பார்த்த பூமிதான். இதில் கம்பு, சோளம், கடலை, தட்டபயறு, பாசிப்பயறு, மொச்சை, கொள்ளு, எள்ளு, போன்ற தானியங்களும் பயறு வகைகளும் உற்பத்தி செய்யப்படுகிறது. விதை விதைத்து அறுவடை செய்து பலன் காண்பதற்குள் ஏக்கருக்கு சராசரி 30 ரூ. முட்டு வழிச்செலவு செய்யவேண்டும். 2 லட்சம் ஏக்கரிலும் விளைந்தாலும், காய்ந்தாலும் 60 லட்சம் ரூபாய் வருடம் தவருமல் செலவு செய்யப்படுகிறது.

இந்த 60 லட்ச ரூபாயும் விவசாயிகள் சேமிப்பிலிருந்து செலவு செய்யப்படுவதில்லை. அரசாங்கத்தினரால் விவசாயிகளுக்கென்று அமைக்கப்பட்டிருக்கும் சொஸைடியில் இருந்தும் கடன் வாங்கப் பட்டதல்ல. பின் எப்படி செலவு செய்யப்படுகிறது. வாரக்கந்து மாதக்கந்து என்ற முறையில் 10 ரூபாய்க்கு 2 அணு வட்டிக்கும், கடன் வாங்கி லேவாதேவிக் கொடுமைக்கு ஆளாகிருர்கள். கடனைத் திருப்பிக் கொடுக்க வழியின்றி நிலமிழந்தோர் அனந்தம். மழைக் காலங்களில் காவேரியில் வரும் உபரி தண்ணீரை வாய்க்கால் வழியாகக் கொண்டுவந்து பேட்டாம்பாறை, சோலிபாளையம், கபிலமலை, இருக்கூர், வீரஸம்பாளையம், ஒத்தமேடு, சூரியாம்பாளையம், கரையாம்புதூர், நல்லியாம்பாளையம், வெள்ளாளபாளையம், படமுடிபாளையம், ஒலூர்பட்டி, குப்புச்சிபாளையம் போன்ற கிராமங்கள் வழியாகத் தண்ணீர் கொண்டுவரவேண்டுமென்றும், அதனால் 30 ஆயிரம் ஏக்கர் வானம் பார்த்த நிலைமை மாறி வருடத்திற்கு ஒருபோகம் வாய்க்கால் தண்ணீர் மூலமும், 2 போகம் வாய்க்காலில் ஏற்படும் ஊற்றுத் தண்ணீர் மூலமும் கிணற்றுத் தண்ணீர் மூலமும் பயிர் செய்து உணவு தானியங்களை உற்பத்தி செய்யமுடியும்.

இளங்கோ,
பரமார்த்தி—நாமக்கல்.

## கேரளத்தில் . . .

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

ரெவ்யூவில் கேரள நிதிமந்திரி சி. அச்சுத மேனனது செல்வாக்கைப் பயன்படுத்தி அவரது மருமகள் கல்யாணி தேவி என்பவர் வைத்தியக் கல்லூரியில் சேர முயன்றதாக ஒரு கடிதம் பிரசுரிக்கப்பட்டுள்ளது. இது பற்றி இ. எம். எஸ். பதிலளிக்கும் பொழுது வைத்தியக் கல்லூரியில் சேரும் வயது வந்த ஒரு மருமகள் நிதிமந்திரிக்குக் கிடையாது. கல்யாணி தேவி என்ற பெயருள்ள மருமகளும் கிடையாது. இத்தகைய விவரங்களை வைத்துக் கொண்டுதான் ஸ்ரீமந் நாராயண் போன்றோர் எங்கள் மீது குற்றம் சுமத்துகிருர்கள் என்றார்.

இதர ராஜ்யங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது கேரளத்தில் குற்றங்கள் குறைந்துள்ளன என்றார்.

# ரஷ்ய, சீன, வியத்நாம் தொழிற்சங்கத் தலைவர்களுக்கு

## கோவையில் மகத்தான வரவேற்பு

கோவை, ஜன. 3—

சோவியத் ரஷ்யா, சீனு, வடக்கு வியட்நும் ஆகிய நாடுகளிலிருந்து எர்ணுகுளத்தில் நடந்த அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரஸின் வெள்ளிவிழா மகாநாட்டுக்கு சகோதரப் பிரதிநிதிகளாக வந்திருந்த தொழிற் சங்கத் தலைவர்கள் 7 பேர்கள் 30-ம் தேதி மாலை கோவைக்கு விஜயம் செய்யப் போகிருர்கள் என்ற தகவல் டெலிபோன் மூலம் கிடைத்தவுடனே, குறுகிய அவகாசமே முன் இருந்தபோதிலும், ஸ்தல தொழிற்சங்கத் தலைவர்கள் எல்லாம் எர்ணுகுளம் மகாநாட்டில் கலந்து கொண்டிருந்த சந்தர்ப்பமாக இருந்தபோதிலும், அப்பாட்டாளித் தலைவர்களுக்கு மகத்தான வரவேற்பளிப்பதற்காக பல்வேறு தொழில்களில் ஈடுபட்டுள்ள தொழிலாளிகளும், கங்கு கரையற்ற உற்சாகத்துடன் வேலைசெய்தார்கள். பரந்த அளவில் நோட்டீஸ் வினியோகம், சுவரொட்டி விளம்பரம் ஆகியவற்றின் மூலமும் மில் கேட் கூட்டங்கள் ஷிப்ட்கூட்டங்கள் ஆகியவைகளைத் தொழிலாளிகள் தாங்களாகவே நடத்தியதோடு, தலைவர்களின் வருகைக்கு முன்னதாகவே, மாலை 4 மணிக்கு மில்களை விட்டு வந்தவுடனே உற்சாகத்துடன் மாபெரும் ஊர்வலம் நடத்தினர்கள். வானம் மப்பும் மந்தாரமுமாகவும், இடையிடையே சிறு தூற்றலாகவும் இருந்தபோதிலும் அவ் வூர்வலத்தில் 2000 பேர்களுக்கு மேல் கலந்துகொண்டார்கள். தலைவர்கள் சிதம்பரம் பூங்காவிற்கு வந்த பொழுது பதினயிரத்திற்கு மேற்பட்ட தொழிலாளிகளும், பொது மக்களும் மகத்தான ஆரவாரத்துடன் வரவேற்றார்கள். பற்பல சங்கங்கள், ஸ்தாபனங்கள், தனி நபர்கள் ஆகியோர் சார்பில் ஏராளமான மலர் மாலைகள் சூட்டப்பட்டன.

### வரவேற்புக் கூட்டம்

இவ்வரவேற்புக் கூட்டத்திற்கு என். மருதாசலம், எம். எல். ஏ. அவர்கள் தலைமை வகித்தார். கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்கப் பொதுக்காரியதரிசி தோழர் கே. என். சின்னையன் அவர்கள் எர்ணுகுளம் மகாநாட்டின் முக்கியத்துவத்தைப் பற்றியும் அதில் நிறைவேற்றப்பட்ட முக்கிய தீர்மானங்களைப்பற்றியும் பேசியதோடு, கோவை ஜில்லாவிலுள்ள பல்வேறு தொழிற்சங்கங்களின் சார்பில் ரஷ்ய, சீன, வியட்நும் தொழிற்சங்கத் தலைவர்களுக்கு நல்வரவு கூறும் முறையில் வரவேற்புப் பத்திரம் ஒன்றை வாசித்தளித்தார்.

### தலைவர்களின் பதிலுரை, நன்றி

தலைவர்கள் தத்தம் மொழிகளிலேயே பதிலளிக்க, அவை ஆங்கிலத்திலும் தமிழிலும் மொழிபெயர்க்கப்பட்டன. நீலகிரி தோட்டத் தொழிலாளர் சங்கத் தலைவர் தோழர் பி. விருத்தகிரி அவர்கள் தமிழில் மொழிபெயர்த்தார். தலைவர்கள் தமக்கு அளிக்கப்பட்ட வரவேற்புக்கு நன்றி தெரிவித்துப் பேசுகையில், அந்நிய ஆட்சியிலிருந்து விடுதலை பெறவும், பின்தங்கிய நிலையிலிருந்து நாட்டைத் தொழில் மயமாக்கி முன்னேறுவதிலும் தொழிலாளி வர்க்கம் அடைந்துள்ள சாதனைகளைப் பாராட்டி, இச்சாதனைகளை உறுதிப்படுத்தி சமாதானத்தையும், ஜனநாயகத்தையும், சோஷலிஸத்தையும் அடைய தொழிலாளி வர்க்கம் ஒன்றுபட்டு நிற்கவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டு நன்றி தெரிவித்தனர்.

### அன்பளிப்புகள்

தலைவர்கள் தமது கோவை விஜயத்தின் ஞாபகார்த்தமாக ரஷ்யாவில் தயாரிக்கப்பட்ட அழகிய பேனு ஒன்று, பென்சில் ஒன்று, பல புத்தகங்கள், சீனுவில் நெசவு மூலம் உருவாக்கப்பட்ட அழகிய படம் ஒன்று ஆகியவைகளை கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்கக் காரியதரிசியிடம் அன்பளிப்பாகத் தந்தனர். மூன்று நாடுகளின் தொழிற்சங்கத் தலைவர்களுக்கும் கோவைஜில்லா மில் தொழிலாளர் சங்கத்தின் சார்பில் தந்தத்தில் அசோக சக்கரம் பொறிக்கப்பட்டு அழகாக மரத்தில் செய்யப்பட்ட ஸ்தூபிகளும், மெக்கானிகல் அண்டு இஞ்சினீரிங் தொழிலாளர் சங்கத்தின் சார்பில் 'கப்' ஒன்றும், திருப்பூர் பனியன் தொழிலாளர் சங்கத்தின் சார்பில் பனியன்களும், பாத்திரத் தொழிலாளர் சங்கத்தின் சார்பில் செம்பு ஒன்றும் அவர்களின் வருகை தந்ததன் ஞாபகார்த்தமாக அன்பளிப்பாக அளிக்கப்பட்டன. இரவு 8-30 மணிக்கு கூட்டம் இனிது முடிந்து, தலைவர்கள் மதுரைக்குப் புறப்பட்டனர்.

## சென்னை நியூடன் டைப் பவுண்டரி தொழிலாளர் வெற்றி

சென்னை, ஜன. 3—

சென்னை மாகாண டைப் பவுண்டரி தொழிலாளர் சங்கத்திற்கும், நியூடன் டைப் பவுண்டரி முதலாளிக்கும் சமீபத்தில் ஏற்பட்ட ஒப்பந்தத்தின்படி தொழிலாளர்கள் கீழ்வரும் நன்மைகள் பெற்றனர்.

1. 1956–57-ம் வருடத்திற்கு ஒரு மாத சம்பளம் போனஸாகக் கிடைத்தது.

2. ஒரு வருடத்திற்கு 1½ மாத சம்பளம் சர்வீஸ் கிராஜுடி.

3. வருடத்திற்குப் பதினைந்து நாட்கள் பண்டிகை லீவ் ; 7 நாள் காஷுவல் லீவ்.

4. அக்டோபர் மாதத்திலிருந்து தொழிலாளிகளுக்கு சம்பள உயர்வு ; 4 பேருக்கு தலா ரூ. 7½ யும், ஒருவருக்கு ரூ. 12½யும், ஒருவருக்கு ரூ. 23, ஒருவருக்கு ரூ. 21, மற்றொருவருக்கு ரூ. 10 சம்பள உயர்வு கிடைக்கும்.

6 மாத காலமாகத் தொழிலாளர் கோரிக்கைகளை மறுத்துவந்த இந்த முதலாளி, தொழிலாளர் ஒற்றுமையால் இக் கோரிக்கைகளை வழங்கும்படி ஏற்பட்டது.

# கோவை சீதாராம் ஓட்டல் தொழிலாளர் வெற்றி

## சங்க காரியதரிசி அறிக்கை

கோவை, ஜன. 3—

கோவை சீதாராம் போர்டிங் & லாட்ஜிங் ஹவுஸ் ரெஸ்டாரண்ட் செக்ஷன் மூடுவது சம்பந்தமாக ஏற்பட்டிருந்த தகராறில் நமது சங்கம் மேற்படி நிர்வாகஸ்தர்களுடன் சமரசப் பேச்சுவார்த்தையைத் தொடங்கியதில் மேற்படி நிர்வாகஸ்தரின் இரண்டு குமாரர்களாகிய ஸ்ரீ ஏ. கே. நாராயணன், ஸ்ரீ. ஏ. கே. பரமேஸ்வரன் ஆகியவர்களும் மேற்படி பேச்சுவார்த்தையில் பங்கு கொண்டு 2 தினங்கள் பேசியதன் விளைவாக, சமரச முடிவு ஏற்பட்டுப் பின்னர் லேபர் ஆபீஸர் அவர்களின் முன்னிலையில் 1–1–'58 தேதியில் ஓர் ஒப்பந்தமும் ஏற்பட்டு 8–1–58 தேதியில் ரெஸ்டாரண்ட் செக்ஷன் மூடும் நடவடிக்கை நிறுத்தப்பட்டு தொடர்ந்து வழக்கம்போல் மேற்படி செக்ஷன் நடைபெறும் என்ற நிலை ஏற்பட்டது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இதன் காரணமாக, சங்கம் ஏற்கனவே முடிவு செய்து வைத்திருந்த, 3—1—58 தேதியில் எல்லா ஓட்டல் தொழிலாளர்களும் பொது வேலை நிறுத்த நடவடிக்கை, சத்தியாக்கிரகம், உண்ணாவிரதம் ஆகிய எல்லாவிதமான நடவடிக்கைகளையும் ரத்து செய்யப்பட்டிருக்கிறது என்பதையும் இதன்மூலம் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நிலைமை ஏற்பட ஒத்துழைத்த ஸ்ரீ. நாராயணன், ஸ்ரீ பரமேஸ்வரன், கோவை லேபர் ஆபீஸர் ஆகியவர்கள் உட்பட எல்லோருடைய சேவைகளுக்கும் சங்கத்தின் சார்பில் வந்தனத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

## எஸ். எஸ். எல். சி. பரீட்சை முடிவுகள்

### எஸ். டி. சி. யில் தேர்வு விகிதம் 78 சதம்

மதுரை, டிச. 31—

1957-ம் வருடம் அக்டோபர் மாதம் நடந்த எஸ். எஸ். எல். சி. பரீட்சையில் மதுரை ஸ்டூடென்ட்ஸ் டூடோரியல் கல்லூரியில் பயின்று பரீட்சை எழுதிய மாணவர்களில் 78 சத விகிதம் பேர் தேர்ச்சிபெற்றுள்ளார்கள். சில பாடங்கள்மட்டும் பூர்த்தி செய்தவர்களின் முடிவுகள் தெரிந்தால் இந்தத்தொகை இன்னும் அதிகரிக்கும் என்று தெரிகிறது. (ந-நி.)

## மனிதவர்க்கத்தின் ஆக்கத்திற்கு ஆராய்ச்சி நடத்துக

### நோபள் பரிசு பெற்ற விஞ்ஞானி வேண்டுகோள்

லண்டன், ஜன. 1—

உலக முற்றிலுமுள்ள விஞ்ஞானிகள் தமது ஆராய்ச்சிகள் மனித வர்க்கத்தின் ஆக்கத்திற்காகவே நடத்தவேண்டும். அழிவிற்காகக் கூடாது. இவ்வாறு விஞ்ஞானிகள் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளவேண்டும். இவ்வாறு நோபல் பரிசு பெற்ற விஞ்ஞானியும் உலக விஞ்ஞானிகள் சங்கத் தலைவருமான பேராசிரியர் சி. எப். பவல் தமது புத்தாண்டு வாழ்த்தில் குறிப்பிட்டுள்ளார்.

# நடக்க இருப்பவை

## சென்னை துறைமுகத் தொழிலாளர் கூட்டுறவு ஸ்டோர் ஆரம்ப விழா

7–1–58 செவ்வாய் மாலை 6 மணியளவில் சென்னை நிதி அமைச்சர் கனம் சி. சுப்ரமண்யம் ஆரம்பித்து வைப்பார். சென்னை டாக் லேபர் போர்டு நிர்வாகக் கமிட்டி தலைவர் திரு. பி.லக்ஷ்மிபதி நாயுடு தலைமை வகிப்பார். (இடம் 76, கொல்லவர் அக்ரஹாரம் ரோடு, தண்டையார் பேட்டை, சென்னை; 1. ரெய்னி ஆஸ்பத்திரிக்கருகில்.

●

## ரஷ்ய, சீன தொழிற்சங்கத் தலைவர்களுக்கு வரவேற்பு

சென்னை, ஜன. 4—

சோவியத் தொழிற்சங்கத் தலைவர்கள் குரீவ், அப்துல்லா, சீனத் தொழிற்சங்கத் தலைவர் லியூ சியா ஷியாங் ஆகியோர்களுக்கு இன்று (5-1-58) மாலை 6 மணிக்கு சைனு பஜார் மைசூர் கபேயில் ஒரு வரவேற்பு அளிக்கப்படும். தொழிற்சங்கப் பிரதிநிதிகள் வருக.

நகர தொழிற்சங்கக் கவுன்ஸில்

# முதலாளிகளிடமிருந்து அரசியல் கட்சிகள் பணம் பெறக்கூடாது

## சி. டி. தேஷ்முக் கண்டனம்

குண்டூர், டிச. 29—

தங்களுடைய கட்சி நிதிக்காக அரசியல் கட்சிகள் பெரிய வர்த்தக, தொழில் முதலாளிகளிடமிருந்து பணம் பெறுவதற்கு இந்திய யூனியன் முன்னாள் நிதி அமைச்சர் திரு. சி. டி. தேஷ்முக் எதிர்ப்புத் தெரிவித்திருக்கிறார்.

யூனிவர்சிடி கிராண்ட்ஸ் கமிஷன் தலைவராக தற்போதுள்ள திரு. தேஷ்முக், இங்கு கிறிஸ்தவ மாணவர் மகாநாட்டில் கடந்த வாரம் பேசுகையில், சோஷலிஸ்ட் பாணி சமூகத்தை ஏற்படுத்துவதுதான் நம் நாட்டின் லட்சியமென்றால், அத்தகைய பழக்கத்தை நிச்சயம் நாம் கடைப்பிடிக்க முடியாது, என்றும் கூறினார். (ஐ. பி. ஏ.)

# சங்க நூல்கள் வெளியீட்டு விழா

சென்னை, ஜன. 1—

இன்று காலை செயின்ட் மேரி மண்டபத்தில் நடைபெற்ற தமிழ் எழுத்தாளர் சங்கக் கூட்டத்தில் சங்க நூல்களின் மலிவுப் பதிப்புகள் வெளியிடப்பட்டன. நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, பத்துப்பாட்டு இவை வெளியிடப்பட்ட மலிவு நூலில் பிரசுரமாகியுள்ளது.

விழாவுக்கு சென்னை கவர்னர் பி. வி. ராஜமன்னார் தலைமைவகித்தார். சங்கத்தலைவர் வெ. சாமிநாத சர்மா வரவேற்புரை நிகழ்த்தினார். ரா. பி. சேதுப்பிள்ளை, மு. வரதராசனார், ம. பொ. சிவஞானம் முதலியோர் சங்க நூல்களின்சிறப்புபற்றிப் பேசினார்கள்.

# நிர்வாகத்தில் தொழிலாளருக்கு பங்கு

## ஒரு பரிசோதனை அல்ல ; ஒரு கொள்கையேயாகும்

—நந்தா.

மதுரை, ஜன. 2—

இங்கு நேற்று மாலை இந்திய தேசியத் தொழிற்சங்கக் காங்கிரசின் 9-வது வருடாந்திர மகாநாட்டைத் துவக்கி வைத்துப் பேசுகையில், யூனியன் தொழிலாளர், திட்டமந்திரி திரு. குல்ஜாரிலால் நந்தா, தொழில் நிர்வாகத்தில் தொழிலாளர்கள் பங்கெடுக்கும்படி செய்வதுஒரு பரிசோதனை அல்ல. ஆனால் ஒரு கொள்கையாகும். அது நிச்சயம் வெற்றியடைய வேண்டும்என்றுகூறினார்.

# $1\frac{1}{2}$ மைல் நீள வாய்க்கால் வெட்டினர்

## வல்லூர் கம்யூனிஸ்டுகள் சேவை

வல்லூர், டிச. 31—

25, 26, 27–12–57 இம்மூன்று நாட்களிலும் பொன்னேரித் தாலுக்கா, வல்லூர் கிளையின் செயலாளர் தோழர் சி. எம். சாமி தலைமையில் தோழர்கள் டி. குப்புசாமி, கே. எஸ். ராமலிங்கம் இவர்களின் சலியாத உழைப்பினால், அத்திப்பட்டு மெயின் கால்வாயிலிருந்து பிரியும் கிளைக்கால் சுமார் $1\frac{1}{2}$ மைல் நீளமுள்ள வாய்க்காலை, விவசாயிகளை உற்சாகப்படுத்தி, சுமார் பத்து வருடகாலமாகத் தூர்ந்து கிடந்ததை, சுத்தமாக மராமத்துச் செய்துள்ளார்கள், இதைக் கண்ட விவசாயிகள் மிகவும் மகிழ்ச்சி அடைந்ததுடன், இந்த வாய்க்கால் வெட்டு அடுத்த ஆண்டுக்கும் பயனடையும் என்று மிகவும் பரபரப்புடன் பேசிக் கொள்வதோடு, இப்படிப்பட்ட ஊழியங்களில் கம்யூனிஸ்ட்கள் தான் நல்ல பணிபுரியக் கூடியவர்களென்றும் சந்தோஷப்படுகிறார்கள். (ந. நி.)

# நெல்லையில் வெள்ளம் நிவாரண வேலையில் கம்யூனிஸ்டுகள்

நெல்லை, ஜன. 2—

திருநெல்வேலியில் பெருமழையின் காரணமாக தாமிரவர்ணி நதியில் 2 மணி நேரத்திற்குள் திடீரென பெருவெள்ளம் இரு கரை பொங்க புரண்டோடியது. இதனால் பல குடிசைகள் தண்ணீரில் அடித்துச் செல்லப்பட்டன. குடிசையின் ஓலையை எடுக்கச் சென்ற இருவர் வெள்ளத்தில் அடித்துச் செல்லும் அபாய கட்டத்தை அடைந்தனர். கரையில் கூடியிருந்த மக்களின் ஊக்கத்தால் ஒருவர் கரை சேர்ந்துவிட்டார். மற்றொருவர் மத்தியில் சிக்கிக் கொண்டதால் தவித்துவிட்டார். மக்களும் கம்யூனிஸ்ட் தோழர்களும், சுலோசனா முதலியார் பாலத்திலிருந்து லாரிக் கயிறு ஒன்றைப் போட்டனர். அதை அவர் பிடித்துக்கொண்டார். பின் பாலத்திலிருந்து கயிறு மூலம் ஒருவர் கீழே இறங்கி தண்ணீரில் வந்தவரை கயிற்றின் மூலம் கட்டி மேலே தூக்கினர். அவர் தன் உணர்வற்றுப் போனபடியால், அவரை கம்யூனிஸ்ட் கட்சி ஜங்ஷன் கிளை செயலாளர் ஆர். சீனிவாசன் மற்றும் பல தோழர்களும் பாளை ஆஸ்பத்திரியில் சேர்த்தனர். அவர் குணமடைந்து வருகிறார்.

# இராமநாதபுரம் ஜில்லா விவசாயிகள் சங்க

## மகசூல் ஜப்தி எதிர்ப்பு மகாநாடு

பரமக்குடி, ஜன. 3—

ஜனவரி 3வது வாரத்தில் சிவகெங்கையில் நடைபெறும்.

மகாநாட்டில் ஜில்லாவிலுள்ள சட்டசபை உறுப்பினர்களும், முக்கிய விவசாயிகள் சங்கத் தலைவர்களும் பங்கெடுத்துக் கொள்வார்கள்.

### மகாநாட்டின் நோக்கம்

இராமநாதபுரம் ஜில்லாவில் கீழ் பகுதியில் அதாவது பழைய ஜமீன் பிரதேசத்தில் பழையவரிப் பாக்கி என்ற பெயரால் பல லட்சக்கணக்கான ரூபாய் விவசாயிகள்மேல் சுமத்தப்பட்டிருக்கிறது. இந்த வரிப் பாக்கி பழைய ஜமீன்தார்களுக்குச் சேரவேண்டியது என்ற வகையில் 1946, 1947, 1948–ம் வருடங்களுக்கும் அதன் பின் விளைவில்லாமல் பயிர்கள் தீய்ந்துபோன வருஷங்களுக்கும், புயலாலும், வெள்ளத்தாலும் பாதிக்கப்பட்ட வருடத்திற்குமாக சேர்ந்து பாக்கி கட்டப்பட்டவையாகும். இதல்லாமல் பரம்பரை தரிசு நிலங்களுக்கும், அவைகள் விவசாயிகளுக்கு சொந்தமாக உள்ளது என்ற ஒரே காரணத்திற்காக நஞ்சைத் தீர்வை விதிக்கப்பட்டும் வரிப்பாக்கி சுமத்தப்பட்டது. இப்படி அநியாயமான முறையில் சுமத்தப்பட்ட வரிப் பாக்கிகளை பரிசீலனைசெய்துபெரும்பகுதியை தள்ளுபடி செய்யவேண்டுமென்று விவசாயிகள்தான் 1954–ம் வருடத்தில் கெடுபிடி வரிவசூல் செய்து பெண்களின் தாலியையும், பீர்க்காவையும் ஜப்தி செய்யப்பட்டது என்பதை நாடு அறியும். இப்பேர்பட்ட வரிப்பாக்கி நீக்கப்படாதது மாத்திரமல்ல மேலும் மேலும் அதிகரிக்கப்பட்டு வந்தது.

இந்த வருடம் பருவ மழை சரியான முறையில் இல்லாததின் காரணமாக இராமநாதபுரம் ஜில்லா கீழ்ப்பகுதியில் ஒன்றுக்குப் பாதி அளவுதான் மகசூல் கண்டு முதலாகும் என்ற நிலையில் உள்ளது. இந்நிலையில் மேலே கூறிய அநியாய வரிப்பாக்கி பூராவையும் ஒரே தடவையில் கட்டிவிட வேண்டுமென்ற அடிப்படையில் அறுவடைக்குப் பக்குவமான நிலங்களில் சென்று ஜப்தி செய்து அறுவடையைத் தடுப்பது விபரம் தெரியாமல் அறுவடை செய்த விவசாயிகளை குடும்பத்துடன் கைதுசெய்வது போன்ற கொடுமையான நடவடிக்கையில் சர்க்கார் இறங்கி இருக்கிறது. இந்த அக்கிரம நடவடிக்கையை தடுத்துநிறுத்த சகலரும் கிளர்ந்தெழுவதோடு இதற்காகக் கூட்டப்படும் மேற்கண்ட மகாநாட்டிலும் பங்கெடுத்துக்கொள்ள வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

எம். ஆதிமூலம்,
இராமநாதபுரம் ஜி. வி. சங்கம்

# மணிமுத்தாறு அணை திறந்து வைக்கப்பட்டது

சென்னை, ஜன. 4—

நெல்லை ஜில்லாவில் மணிமுத்தாறு அணையை ஸ்தல ஸ்தாபன மந்திரி திருமதி லூர்தம்மாள் சைமன் நேற்று திறந்து வைத்தார். இந்த அணையில் 550 கோடி கன அடி தண்ணீர் தேங்குவதற்கு வகை செய்யப்பட்டுள்ளது. இதிலிருந்து 23 மைல் நீளம் உள்ள ஒரு பிரதான கால்வாய் செல்லுகிறது. இதுவரை மழையை நம்பிக்கொண்டிருந்த ஏரிகளுக்கு இனி இந்தக் கால்வாய் மூலம் அணையிலிருந்து தண்ணீர் கிடைக்கும்.

இந்த அணை சுமார் 5 கோடி ரூபாய் செலவில் கட்டப்பட்டுள்ளதாம்.

இந்த மணிமுத்தாறு அணை தாமிரபர்ணி நதியிலிருந்து பிரிந்து வரும் உப நதியாகும்.

இந்த அணையைக் கட்டுவதற்காக இந்தப் பிரதேச விவசாயிகளும் நிலச்சுவான்தார்களும் சர்க்காருக்குக் கடனாக ஒரு கோடி ரூபாய் அளித்துள்ளார்கள் என்று தெரிகிறது.

# சீனாவிலுள்ள அமெரிக்கக் கைதிகள்

## பேட்டிகாண அவர்களின் தாயார்களுக்கு அனுமதி

நியூயார்க், ஜன. 2—

சீனசர்க்காருக்கு எதிராகஉளவு வேலைகளில் ஈடுபட்டதற்காக மூன்று அமெரிக்கர்கள்1952-ல் 20 வருட தண்டனையும், ஜென்ம தண்டனையும் விதிக்கப்பட்டனர். அவர்கள் தற்பொழுது சீனாவில் கைதிகளாக தண்டனை அனுபவித்து வருகின்றனர்.

அவர்களைப் பேட்டி பார்ப்பதற்காக, அவர்களின் தாயார்களை சென்ற மாதம் சீன சர்க்கார் அழைத்திருந்தது. அவர்கள் சீனா செல்ல அமெரிக்க ராஜாங்க இலாகாவும் அனுமதி கொடுத்துவிட்டது. அதன்பேரில், மேற்படி மூன்று தாயார்களும் கடந்த செவ்வாயன்று இங்கிருந்து விமானத்தில் சீனாவிற்குப் பயணமாயினர்.

## ரஷ்யாவில் மின்சார வளர்ச்சி அமெரிக்காவை விட இருமடங்கு

வாஷிங்டன், ஜன. 1—

மின்சார வளர்ச்சியில் ரஷ்யா வெகு துரிதமாக முன்னேறி அமெரிக்காவைவிட இருமடங்கு மின்சாரம் உற்பத்தி செய்கிறது என்று மைக்கேல் ஸ்ட்ராஸ் என்னும் அமெரிக்க அதிகாரி ஜனாதிபதி ஐஸன்ஹோவருக்கு சமர்ப்பித்துள்ள ஓர் அறிக்கையில் குறிப்பிடுகிறார்.

# தார் கம்பெனி தொழிலாளர் 230 பேர் பட்டினி

## நீதிமன்றத் தீர்ப்புக்கு என்ன மதிப்பு?

சென்னை, ஜன. 3—

வடசென்னையிலுள்ள டி. என். கே. ஜி. செட்டியாருக்குச் சொந்தமான தார் கம்பெனியில் தொழிலாளர் சங்கம் வைத்து சாதாரண கோரிக்கைகளைக் கேட்டதற்காக, மாதக் கணக்கில் கதவடைப்பு நடத்தி, நூற்றுக் கணக்கான தொழிலாளர்களைப் போட்டு வதைத்ததையும்—என் செயலால் ஆவது யாதொன்றுமில்லை எல்லாம் முதலாளியின் செயலே என்று உணரப்பட்டேன் பராபரமே என்று சர்க்கார் வாய்மூடி கண்மூடி நின்ற விஷயமும் — ஆனால், கருங்காலிகளைப் போகவிடாமல் சாத்வீகமாக மறியல் செய்த தொழிலாளர்களை லாரி லாரியாகப் பிடித்து வழக்குத் தொடுக்க மட்டும், சர்க்கார் போலீஸ் படைகளை அனுப்பிய விஷயமும்— இதுசம்பந்தமாக சட்டசபையில் கம்யூனிஸ்ட் அங்கத்தினர் வி. கே. கோதண்டராமன் பேசிய விஷயமும்— சர்க்கார் தலையிட்டு, நீதிபதி நியமித்து தீர்ப்பு வெளிவந்த விஷயமும்— தீர்ப்பின்படி தொழிலாளர்கள் அனைவரையும் வேலைக் கொடுத்துக்கொள்ள வேண்டியிருக்க, ஒரு 60, 70 பேருக்கு மட்டும் வேலை கொடுத்துவிட்டு மீதி 230 பேருக்கு வேலை கொடுக்காமல் பட்டினி போட்டு வருகிற விஷயமும், ஏற்கனவே நேயர்கள் அறிவார்கள்.

ஆனால் முதலாளி எப்படியாவது தொழிற்சங்கத்தை உடைத்துவிடவேண்டுமென்றும், உடைத்துவிட்டு என்றும்போல் 15 வருட சர்வீஸ் ஆனவர்களைக்கூட டெம்பரரியாக வைத்து 1, $1\frac{1}{2}$ என்று கூலி கொடுத்து, இரத்தத்தை உறிஞ்சலாம் என்று நினைக்கிறார்.

கோர்ட்டு தீர்ப்புக்கு என்ன மதிப்பு என்று தெரியவில்லை. சர்க்காரும் இடித்த புளி மாதிரி இருக்கிறது. தொழிலாளர்களோ சொல்லொணாத் துன்பதுயரத்தில் ஆழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

## சோவியத் தொழிற்சங்க தலைவர்களுக்கு உடுமலையில் வரவேற்பு

உடுமலைபேட்டை, ஜன. 2—

அகில இந்திய தொழிற்சங்க மகாநாட்டுக்கு வந்த சோவியத் ரஷ்யா, சீனா, வியட்-நாம் தொழிற்சங்க தலைவர்களுக்கு உடுமலை ரயிலடியில் 1-1-58 இரவு 1-30 மணிக்கு மில் தொழிலாளர் சங்கம், கைநெசவுத் தொழிலாளர் சங்கம், ரைஸ் அண்டு ஜின்னிங் பேக்டரி தொழிலாளர் சங்கம் ஆகியவைகளின் சார்பாக மாலையிட்டு சகோதர தொழிலாளர்களுக்கு வாழ்த்து தெரிவித்துக் கொள்ளுமுறையில் கோஷமிட்டனர். இத்தலைவர்கள் கோவையிலிருந்து மதுரைக்கு சென்று கொண்டிருந்தனர்.

# கேரள ராஜ்யத்தில் இரண்டாம் திட்டம்

## டில்லியில்பேச்சுவார்த்தைகள்

புதுடெல்லி, ஜன. 2—

கேரள முதலமைச்சர் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாட், நிதியமைச்சர் சி. அச்சுத மேனன் இருவரும் இங்கு நேற்று வந்து சேர்ந்தனர். கேரள ராஜ்யத்தில் இரண்டாம் திட்ட வேலைகளைப் பற்றி மத்திய மந்திரிகளிடமும், திட்டக் குழுவினிடமும் அவர்கள் பேச்சுவார்த்தை நடத்துவார்கள்.

இப்பொழுது நிர்ணயித்துள்ள தொகை ரூ. 87 கோடி. 1957–58 வருடத் திட்டச் செலவுக்கு ரூ 17 கோடி கொடுக்கப்பட்டுள்ளது. ரூ. 20 கோடியாவது அளிக்கப்பட வேண்டும் என்று கோரப்பட்டிருந்தது.

# நில விநியோகம் செய்யப்பட்ட நாடுகளில் விவசாய உற்பத்தி பெருகியுள்ளது

## நிலச் சீர்திருத்தத்தின் அவசியம் பற்றி முன்னாள் உணவு கமிஷனர் வலியுறுத்தல்

ஹைதராபாத், ஜன. 3—

நில விநியோகம் செய்யப்பட்ட நாடுகளில் விவசாய உற்பத்தி பெரியளவு அதிகரித்திருக்கிறது. நில விநியோகம் என்பது சோஷலிஸ்ட் நாடுகள்மட்டும் ஏற்றுள்ள நடவடிக்கையல்ல, முதலாளித்துவ பொருளாதாரமுள்ள நாடுகளும் அங்கீகரித்துள்ளன என்று இங்கு பேசிய முன்னாள் இந்திய சர்க்கார் உணவு கமிஷனர் ஆர். கே. பட்டில் கூறினார்.

இந்தியாவில் உணவுற்பத்தி முதல் திட்டத்தின் கீழ் 30 சதவிகிதம் அதிகரித்திருப்பதாக உரிமைப் பாராட்டப்படுகிறது. ஆனால் சுதந்திரம் பெறுவதற்கு முன்பு இறக்குமதி செய்த அதே அளவு உணவுப் பொருள்களை இப்பொழுதும் வெளிநாடுகளில் இருந்து இறக்குமதி செய்து வருகிறோம் என்றார் அவர்.

விவசாயத்தில் அதிகப் பணம் போட்டால், யந்திர நுட்ப முறைகளைக் கையாண்டால் உற்பத்தியைப் பெருக்கிவிடலாம் என்று நான் நம்பவில்லை. நிலச் சீர்திருத்தம்தான் உடனடி அவசியம் என்று எவருக்கும் படும் என்றார்.

# வ. உ. சி., கட்டபொம்மன் சிலைகள் நிறுவ முடிவு

## பாளையங்கோட்டை நகர சபையில் தீர்மானம்

பாளையங்கோட்டை, ஜன. 1—

டிச. 30-ந்தேதி நடைபெற்ற இந்நகர சபையின் கூட்டத்தில் கப்பலோட்டிய தமிழன் வ. உ. சிக்கும், வீரபாண்டிய கட்டபொம்மனுக்கும் நினைவுச் சின்னங்கள் அமைப்பது என்று தீர்மானிக்கப் பட்டது.

# சென்னை சட்டசபை பிப்ரவரி 8-ல் கூடும்

சென்னை, ஜன. 3—

வருகின்ற பிப்ரவரி மாதம் 8-ந் தேதியன்று காலை 11 மணிக்கு சென்னை சட்டசபை கூடும். அதே சமயத்தில் மேல் சபையும் கூடும். இதுபற்றிய கவர்னரின் அறிவிப்பு விசேஷ கெஜட்டில் பிரசுரிக்கப்பட்டுள்ளது.

# வினை விதைக்க, தினை முளைக்குமா?

## தேர்தல் சமயத்தில் ஈ. வெ. ரா. தந்த ஜாதீய ஆதரவை காங்கிரஸ் ஏற்க வில்லையா?

## பிராமணர் சங்கமும் கூடாது

### திருச்சிக் கூட்டத்தில் ஜீவா

சென்னை, ஜன. 4—

**"ஈ.வெ.ரா. ஜாதி வெறியைத் தூண்டிவிட்டு, காங்கிரஸுக்கு ஓட்டுத் திரட்டிக் கொடுத்தார். காங்கிரஸ் கட்சி அந்த ஜாதி வெறிப் பிரச்சாரத்தைக் கொஞ்சம்கூட எதிர்த்தது கிடையாது. இந்த சங்கதி, நேரு உட்பட காங்கிரஸ் மேலிடத்துக்கும் தெரியும், தெரிந்தும் அனுமதித்தார்கள்.**

**இன்று நாட்டை விட்டு வெளியே போ என்கிற நேரு, அன்று ஈ. வெ. ரா.வின் ஜாதீய ஆதரவு காங்கிரஸ் கட்சிக்குக் கிடைப்பதை ஆதரித்துக் கொண்டுதானே இருந்தார்!".**

இவ்வாறு திருச்சியில் 22-12-57-ல் நடைபெற்ற தமிழக கம்யூனிஸ்ட் கட்சியின் விசேஷப் பிரதிநிதிகள் மாநாட்டுப் பொதுக் கூட்டத்தில் கம்யூனிஸ்ட் தலைவர் ஜீவா அம்பலப்படுத்தினார்.

அவரது நீண்ட சொற்பொழிவு கடந்த 9 நாட்களாக தொடர்ச்சியாக வெளிவந்திருக்கிறது.

### ஜீவா பேச்சு

"அன்பார்ந்த தோழர்களே! தமிழ்ப் பொதுமக்களே! அரசியல் சட்டப் புத்தகத்தையும், காந்தியடிகள் படத்தையும் தேசியக் கொடியையும் எரித்து, ஜாதி ஒழிப்பின் பேரால் ஈ. வெ. ரா. நடத்தும் போராட்டம் நாட்டுக்கு ஒரு பெரிய பாதகத்தையும் விளைவிக்கிறது. அதாவது வளர்ந்து வரும் ஒன்றுபட்ட ஜனநாயக இயக்கத்தைச் சீர்குலைக்க உதவுகிறது. எப்படி?

### ஜாதி என்பதால்தானே

"தமிழகப் பெருமக்களுக்கு எதிராக, பலவித நடவடிக்கைகளை காமராஜ் சர்க்கார் எடுத்துவருகிறது. இந்த சர்க்காரின் தலைவர் ஒரு பார்ப்பனரல்லாதார் என்ற ஒரே காரணத்துக்காக, ஈ. வெ. ரா. அவரை ஆதரித்து வருகிறார். ஈ. வெ. ரா. பெரியார் கைது ஆன பிறகு வெளியிட்ட செய்தியில் கூட, காமராஜ் சர்க்காரின் கையைப் பலஹீனப்படுத்துகிற எந்தக் காரியத்தையும் மறந்தும் செய்யக்கூடாது என்று தமது பக்தகோடிகளுக்கு அறிவுரை வழங்கியிருக்கிறார்.

### பிற்போக்குக்கு பலம்

"இவையெல்லாம், ஏதோ தற்செயலாக நடக்கிறவைகளல்ல. பெரியார் போராட்டத்தின் அடிப்படைக் கொள்கை எப்படி பிற்போக்குச் சக்திகளுக்குப் பலத்தைத் தேடித் தருகிறது என்பதையே இவை எடுத்துக் காட்டுகின்றன என்பதை நீங்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்று உங்களை வேண்டிக் கொள்ளுகிறேன்.

"நான் ஏற்கனவே கூறியது போல், மேற்படி வெறிச்செயல்களைத் தடுத்து நிறுத்தவேண்டிய கடமை, நாட்டின் நலனிலும், ஜாதி ஒழிப்பிலும் நாட்டம் கொண்ட சகல பகுதி மக்களுடையவும் அவசர அவசியக் கடமை என்பதை எங்கள் மாநாட்டுத் தீர்மானம் சுட்டிக் காட்டுகிறது

### பிராமண சங்கம் கூடாது

இதே பொழுதில், பிராமண நண்பர்களுக்கு ஒரு வார்த்தை. தி. க.வினரின் பலாதகாரத் தாக்குதலிலிருந்து, தங்களைப் பாதுகாத்துக் கொள்வதற்காக, பிராமணர் சங்கம் போன்ற ஜாதிய அடிப்படையில் புதிய சங்கங்களை தோற்றுவிக்கும் பாதை பெரிதும் உதவிகரமாக இராது என்பதை அவர்கள் நிதானமாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்று கம்யூனிஸ்ட் கட்சி வேண்டிக் கொள்ளுகிறது. மீண்டும் ஜாதிய சங்கங்களை உருவாக்குவது, ஜாதிய உணர்வைப் போக்காது. மேற்படி வெறிச்செயல்களை முறியடிப்பதற்கான மக்கள் ஒற்றுமையை திரட்டாது. ஜாதிய சங்க அமைப்பில் சகல பகுதி மக்களுடைய ஒத்துழைப்பில்தான் இந்த வெறிச் செயல்களுக்கு வெற்றிகரமாக முடிவுகட்ட முடியும் என்ற அனுபவ பூர்வமான உண்மை மறைக்கப்படுகிறது.

### சகலஜன ஆதரவே சரியான பாதுகாப்பு

எனவே, பாதிக்கப்பட்ட நண்பர்கள், மேற்படி அநாகரிகப் போக்கை, வெறிச் செயல்களை, எதிர்க்கும் எல்லாப் பகுதி மக்களோடும் ஒன்றுபட்டுப் போராடுவதுதான்நிலையான பாதுகாப்பை அளிக்கும் என்று அவர்களுடைய கவனத்துக்கு கம்யூனிஸ்ட் கட்சி நிதானமாகக்கொண்டுவர விரும்புகிறது.

பிராமண இளைஞர்கள் முன்னணியில் நின்று, காலப் போக்கை உணர்ந்து இந்த திசையில், தங்களுடைய பங்கைச் செலுத்துவார்கள் என்று நம்புகிறேன்.

### சர்க்காரும் உடந்தையே

இனி சர்க்காருடைய கொள்கையைக் கவனிப்போம். அண்மையில், ஜாதி வெறியைத் தூண்டிவிடும் போராட்டத்தை பண்டித நேரு, வன்மையாகக் கண்டித்தார் என்பது மெய். இந்தக் கண்டனம் மட்டும் போதுமா? இவ்வாறு வெறிச் செயல்கள் உருவாவதற்கு சர்க்காரின் கொள்கையும் குறிப்பிடத்தக்க அளவு காரணமாக இருக்கவில்லையா?

பெரியாரின் ஜாதி வெறிப் போக்குக்கு நேரடியாக இல்லாவிட்டாலும் மறைமுகமாக காமராஜர் சர்க்கார் ஊக்கமளித்து வந்திருக்கிறது என்பது தமிழ் மக்கள் அறிந்த விஷயம்.

### காங்கிரஸ் எதிர்த்ததா?

ஈ. வெ. ரா. காங்கிரசுக்கு தேர்தலில் ஓட்டு திரட்டிக் கொடுத்தார். ஜாதி வெறியைத் தூண்டிவிட்டு ஓட்டு திரட்டிக் கொடுத்தார். காங்கிரஸ் கட்சி அந்த ஜாதி வெறிப் பிரச்சாரத்தை கொஞ்சம் கூட எதிர்த்தது கிடையாது. இந்த சங்கதி காங்கிரஸ் மேலிடத்துக்குத் தெரியாதா? காங்கிரஸ் மேலிடத்துக்கும் இந்தச் சம்பவங்களுக்கும் ஒரு சம்பந்தமும் இல்லையா? அவ்வாறு யாரும் சொல்லிவிட முடியாது.

பண்டித நேரு உட்பட, காங்கிரஸ் மேலிடம் இந்தமாதிரியான— இந்த மாதிரியான கோடு கீச்சிக் கொள்ளுங்கள்; காங்கிரஸ்—தி. க. உறவுகளை அனுமதித்தே வந்திருக்கிறது.

### நேருவும் காமராஜும்

இரண்டொரு உதாரணம் கொடுக்கிறேன். சென்ற பொதுத் தேர்தலின்போது பண்டித நேரு சென்னையில் பேசினார். பக்கத்தில் காமராஜர் உட்கார்ந்திருந்தார், நேரு பேசும்பொழுது திராவிட இயக்கத்தை ஒட்டுமொத்தமாகக் கண்டித்துப் பேசத் தொடங்கினார். காமராஜர் தி. மு. க வை மட்டும் கண்டியுங்கள் என்று குறிப்பிட்டார். அந்தத் திருத்தத்தோடு, பின்னர் தன் பேச்சில் தி. க. வை விட்டு விட்டு தி. மு க. வையே தாக்கிப் பேசினார். இது எதைக் காட்டுகிறது இது அரசியல் சந்தர்ப்பவாதத்தைக் காட்டவில்லையா? இது ஒன்று...

### நேருவும் முஸ்லீம் லீகும்

கேரளத்தில் கம்யூனிஸ்ட் மந்திரி சபை ஏற்படுத்துவதற்குமுன், ஒரு பொதுத் தேர்தல் ஏற்பட்டதல்லவா! அந்தத் தேர்தலின் போது பண்டித நேரு அங்கு சென்று சூருவளிப் பிரச்சாரம் நடத்தினார். மலபாரில் சென்ற இடங்களிலெல்லாம், இங்கு அண்மையில் தி. க.வைத் தாக்கிப் பேசினது மாதிரி, முஸ்லீம் லீகை தாக்கிப் பேசினார். நாட்டை விட்டு வெளியேற வேண்டுமென்றெல்லாம் காரசாரமாகத் தாக்கினார். அவர் கேரளத்திலிருந்து திரும்பிச் செல்ல காரில் காலெடுத்து வைக்கவில்லை. அதற்குள்ளாக, கேரள காங்கிரஸ் பிரமுகர்கள் முஸ்லீம் லீகோடு கூட்டணி வகுக்கக் குழையடிக்கத் தொடங்கினார்கள், அந்தக் குழையடிப்பு இன்றுவரையும் நிற்கவில்லை.

### தெரிந்தே அனுமதித்தனர்

இவ்வாறு, அரசியலில் ஜாதீயத்தை, வகுப்புவாதத்தைப் புகுத்தும் ஜனநாயகவிரோதமானபோக்கை காங்கிரஸ் மேலிடம் தெரிந்தே அனுமதித்து வந்திருக்கிறது.

### ஜாதி, மத வெறிகளை நாங்கள் எதிர்த்தோம்

கம்யூனிஸ்ட் கட்சியைஎடுத்துக் கொள்ளுங்கள்! சென்ற பொதுத் தேர்தலில் ஒரிசாவில் நாங்கள் கணதந்திரப் பரீஷத்தோடு, ஜார்கண்ட் கட்சியோடு, இத்தகைய வகுப்புவாதக் கட்சிகளோடு நாங்கள் கூட்டணி வகுக்க ஒப்புக் கொண்டிருந்தால் காங்கிரஸ் கவிழ்ந்திருக்கும்; மந்திரி சபையில் எங்களுக்கும் இரண்டு இடங்கள் கிடைத்திருக்கும்.

### எங்களை எதிர்க்க வகுப்புவாதத்துடன் உறவு

காங்கிரஸ் எதிர்ப்பைவிட, வகுப்புவாத எதிர்ப்பையே நாங்கள் பெரிதுபடுத்தினோம். எனவே அவர்களோடுநாங்கள் சேரவில்லை. மாறாக, எங்களை ஒழிக்க, கேரளத்தில்வகுப்புவாத முஸ்லீம் லீகோடு காங்கிரஸ் கொஞ்சிக் குலாவுகிறது. இந்த ராஜ்யத்தில் எங்களைத் தோற்கடிக்க, தங்களுக்கு அதிக ஸ்தானங்கள் பெறவும் திராவிடக் கழகத்தின் ஜாதி வெறிப் பிரச்சாரத்தை அனுமதித்தது.

### கம்யூனிஸ்ட் கட்சி மட்டுமே

அன்பர்களே! வகுப்புவாதத்துக்கோ, ஜாதீய வாதத்துக்கோ கிஞ்சிற்றும் இரையாகாத ஒரு அரசியல் கட்சி, அனைத்திந்தியாவிலும் இருக்கிறதென்றால், அது கம்யூனிஸ்ட் கட்சியே என்பதை நீங்கள் உணர வேண்டும்.

அரசியல் ஆதிக்கத்துக்காகவும், சுரண்டலை எதிர்த்து பொது மக்கள் நடத்தும் போராட்டங்களில் உருவாகும் ஒற்றுமைக்கு உலை வைப்பதற்காகவும் பிற்போக்காளர்கள் ஜாதி வெறியைப் பயன்படுத்தி வருகிறார்கள், என்பது நமது நாட்டு ஜனநாயக இயக்கத்தின் நடைமுறையில் நாம் கண்ட அனுபவம்.

இதைப்போல், பதவி வேட்டை திருவிளையாடல்களிலும் ஜாதி வெறியைப் படுமோசமாக உபயோகப்படுத்தி வருவதும் நாம் கண்கண்ட அனுபவம் என்பது உங்களுக்குத் தெரியும்.

### முதுகுளத்தூரில் முடியும்

ஜாதி வெறியை அரசியல் ஆதிக்கத்துக்காக உபயோகப்படுத்தத் தொடங்கினால், அது எத்தகைய பயங்கர விளைவுகளை உண்டுபண்ணும் என்பதற்கு முதுகுளத்தூர் சம்பவங்கள் சிறந்த எடுத்துக்காட்டுகள் என்பதை உங்கள் கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

எனவே, நாட்டின் வளர்ச்சியிலும், ஜனநாயக வளர்ச்சியிலும் ஜாதிக் கொடுமைகளற்ற சமுதாய வாழ்வில் அக்கறை கொண்டுள்ள சகல அரசியல் கட்சிகளும், சகல ஸ்தாபனங்களும், ஜாதி வெறிச் செயல்களில் ஈடுபடும் போக்கை எதிர்த்து மக்களைத் திரட்ட வேண்டும் என்று எங்கள் மகாநாட்டுத் தீர்மானம் பணிவன்போடு கேட்டுக்கொள்ளுகிறது.

### ஒத்துழைப்பீர்!

ஜாதி உணர்ச்சியினால் நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் ஏற்படும் தீங்குகளை தெள்ளத் தெளிவாக உணர்த்தி, அதை அறவே அகற்றப் பிரச்சாரம் செய்ய வேண்டுமென்றும், ஜாதிக் கொடுமைகள் எந்த உருவத்தில் தலைகாட்டினாலும் அவற்றைவிட்டு வைக்காமல் இடைவிடாது எதிர்த்துப் போராட வேண்டுமென்றும், இவை கம்யூனிஸ்டுகளின் கடமைகள் என்றும் எங்கள் மாநாட்டுத் தீர்மானம் எங்களுக்குக் கட்டளையிட்டிருக்கிறது.

இத்தகைய கடமைகளை கம்யூனிஸ்டுகளாகிய நாங்கள் நிறைவேற்ற முயற்சி செய்வதில், பொதுமக்களாகிய நீங்கள், பரிபூரண ஆதரவு தரவேண்டுமென்று உங்களை வேண்டிக் கொள்ளுகிறேன்" என்று ஜீவா பேசி முடித்தார்.

கூடியிருந்த இருபதாயிரத்துக்கு மேற்பட்ட பொது மக்களும் நீண்ட நேரம் கையொலி எழுப்பி வாழ்த்தொலி முழக்கினர்.

கம்யூனிஸ்ட் கட்சி மகாநாட்டுத் தீர்மானங்கள்மீது ஜீவா ஆற்றிய தெளிவுரை (நாளை முடியும்.)

## மகாகுஜராத், சம்யுக்த மகாராஷ்ட்ரா கோரிக்கையை அளிக்கவும்

### நேருவுக்கு அஜய்கோஷ் வேண்டுகோள்

பம்பாய், ஜன. 2—

சம்யுக்த மகாராஷ்ட்ரா, மகாகுஜராத் கோரிக்கையை அளியுங்கள். அதுதான் இந்திய ஒற்றுமையையும், ஜனநாயகத்தையும் பலப்படுத்தும், என்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக் காரியதரிசி அஜய் கோஷ் நேற்று முன்தினம் இங்கு பிரதமர் நேருவுக்கு வேண்டுகோள் விடுத்தார்.

பம்பாய் பத்திரிகையாளர் சங்கத்தில் நிருபர்களுக்கு அளித்த பேட்டியின்போதே அஜய்கோஷ் மேற்கண்டவாறு கூறினார். அவர் மேலும் பேசுகையில், கடந்த பொதுத் தேர்தலில் சம்யுக்த மகாராஷ்ட்ரா சமிதிக்குக் கிடைத்த வெற்றிகள், பம்பாய் முனிசிபல் கார்ப்பொரேஷன் தேர்தலிலும், பல ஸ்தலத் தேர்தல்களிலும் கிடைத்த வெற்றிகள்.

பிரதமர் நேரு சிவாஜியின் சிலையைத் திறப்பதற்காக பிரதாப்கிருக்கு வந்திருந்தபோது நடைபெற்ற ஆர்ப்பாட்டம்—ஆகிய இவையெல்லாம் மகாராஷ்ட்ரா மக்களில் மிகப் பெரும்பான்மையோர் சம்யுக்த—மகாராஷ்ட்ரா கோரிக்கைக்கு ஆதரவாக நிற்கிறார்கள் என்பதையே காட்டுகிறது என்றார்.

மகாகுஜராத் கோரிக்கைக்கு குஜராத்தில் கணிசமான ஆதரவு இருக்கிறது என்பதையும் பொதுத் தேர்தல்கள் எடுத்துக் காட்டின. மேலும் பம்பாயை சம்யுக்த மகாராஷ்டிரத்துடனேயே இணைப்பதற்கு ஆதரவாக குஜராத்திலும் பொதுஜன அபிப்ராயம் உருவாகி வருகிறது. மேலும் இந்தப் பிரச்சினையிலுள்ள கருத்து வேற்றுமை மகா குஜராத் ராஜ்யம் அமைப்பதற்குத் தடையாய் நிற்க வேண்டியதில்லை, என்றும் மக்கள் கருதுகின்றனர், என்றும் அஜய் கோஷ் கூறினார்.

## செக் உதவியுடன் பவுண்டரி தொழிற்சாலை

புதுடெல்லி, ஜன. 3—

செக்கோஸ்லோவேகியாவின் பண உதவி தொழில் நுட்ப உதவியுடன் ஒரு பவுண்டரி தொழிற்சாலை ஆரம்பிக்க இந்திய சர்க்கார் முடிவு செய்துள்ளது.

ரஷ்யா அளித்துள்ள உதவி போலவே யந்திர தளவாடங்கள் பணம் இவற்றை செக்கோஸ்லோவேகியா அளிக்கும்.

## இந்திய மாணவர்களுக்கு போலந்து சர்க்காரின் உபகாரச் சம்பளம்

புதுடில்லி, ஜன. 3—

1958-ம் வருஷத்தில் பின்வரும் விஞ்ஞானத் துறைப் பாடங்களில் விசேஷப் படிப்புகளை மேற்கொள்வதற்காக 'யுனெஸ்கோ'' ஸ்தாபனத்தின் மூலம் 10 உபகாரச் சம்பளங்கள் வழங்கப் போலந்து சர்க்கார் முன்வந்துள்ளனர்.

ரசாயனம், எலெக்ட்ரானிக்ஸ், கணிதம், சுரங்க எஞ்சினீயரிங், கப்பல் கட்டுதல், உலோக என்கிரேவிங்—உலோக வேலை, மின்சார டிரான்ஸ் மிஷின்.

இந்தியர்களுக்கு எத்தனை உபகாரச் சம்பளங்கள் வழங்கப்படும் என்பது இன்னும் நிச்சயிக்கப்படவில்லை. எனினும், இந்திய சர்க்கார் இரண்டு அல்லது மூன்று பெயர்களை "யுனெஸ்கோ" மூலம் சிபாரிசு செய்துள்ளனர். இந்த உபகாரச் சம்பளம் மாதத்துக்கு 2,400 ஸ்லோட்டிஸ் (சுமார் 480 ரூபாய்) வீதம் வழங்கப்படும். பாட போதனைக் கட்டணம் செலுத்துவதிலிருந்து அவர்களுக்கு விலக்களிக்கப்படும். ஜாகை வசதியும் வைத்திய வசதியும் இலவசமாக அளிக்கப்படும்.

இதற்கான விண்ணப்ப நமூனக்களையும் மேற்கண்ட விவரங்களையும் மத்திய கல்வி-விஞ்ஞான ஆராய்ச்சி மந்திரி காரியாலயத்தைச் சேர்ந்த உபகாரச் சம்பளங்கள் பிரிவிலிருந்து (எஸ். 9 பிரிவு) பெற்றுக் கொள்ளலாம்.

விண்ணப்பங்களை சிபாரிசு செய்யும் ஸ்தாபனங்கள் மூலம் இந்தக் காரியாலயத்தில் ஏற்றுக் கொள்வதற்கான கடைசித் தேதி 1958 பிப்ரவரி 7.

Printed & Published by S. Krishnaswamy at Janasakthi Press Madras-1
Editor: P. JEEVANANDAM,